# பிடி அண்ணாவை!

"ஆர்சி" எழுதியது



# பிடி அண்ணவை!

பிடி அண்ணவை! ஏன்? என்று கேட்கின்றீர்களா?

கடவுள் நம்பிக்கையற்றவன், வேதநிந்தகன், நாத்திகம்பேசி நாத்தழும்பேறிய நயவஞ்சகன், கம்பரின் கலைமேதையைப் புரிந்துகொள்ளாமல் பொசுக்குங்கள் என்று கூறும் போக்கிரி, இளைஞர்களின் உள்ளத்திலே இருளையுண்டாக்கும் எஃகு நெஞ்சம் படைத்த நீசன்—அவன் வார்த்தைகளைக் கேட்டு மயங்கிடாமல் இருப்பதே மக்கள் மதத்திற்குச் செய்யும் மாபெரும் தொண்டு; எனவே பிடி அண்ணவை!

இவைகள் தான் இன்று சாதாரணமாகக் காங்கிரஸ் கண்யவான்களாலும், வைதீகச்சீலர்களாலும் நம் மீது வீசப்படும் வெடிகுண்டு! ஆனல்,

கேலியும், கிண்டலும் கூரிய வேல்களாக வீசப்பட்டாலும், நாட்டுப்பற்று மக்கள் மனத்தின் திட நம்பிக்கை மட்டும் ஒரு நாளும் மாறுது.

புயலெனக் கிளம்பிடும் புனிதச் சேவையை, புல்லேந்தும் நரிக்கூட்டம் பொசுக்கிடத்தான் எண்ணும்! ஆனல்,

இது வேதகாலமல்ல, பாதவருடியாகப் பண்பாடி வாழ்வதற்கு. மக்கள் பாமரர்களாய் இருந்தக் காலத்தில், பலப் பல பொய்ப் புராணப் புரட்டுகளைப் புகன்ற போதனையால் பேதங்களையூட்டி, மதம் என்னும் மாய்கையில் வீழ்த்தி, வாட்டி வதக்குவதற்கு அந்தக்காலம் பயன்பட்டிருக்கும்.

இந்த இருபதாம் நூற்றூண்டோ விநாடிக்கு விநாடி, விடிவெள்ளிகளை உண்டாக்கி, மக்களைப் பற்றியிருக்கும் சாதிச்சனியனையும், மதப்பேயையும் விரட்டி மக்கள் எல்லாம் பகுத்தறிவு பெற்றுவரும் காலம். அதனுல்தான், எதையும், எவர் கூறினலும், அவரவர்கள் அறிவைக்கொண்டு ஏன்? எதற்கு? எப்படி? என்ற விஞக்களைக்கேட்டு, இவைதான் மனிதச்செயல், மற்றது மிருகச்செயல் என, சிந்தனைக்கு விருந்திட்டு பகுத்துப்பார்க்கும் அளவில் நம் நாடு இந் நன்னிலைக்கு வந்துகொண்டிருக்கிறது.

இதிலேதான், சில காளான்கள் முளைத்து, கண்ட கண்டபடி உளறிக்கொட்டி மக்களை இன்னும் சவக் குழிக்குக் கொண்டுசெல்லுகிறது.

சாதாரணமாக, உடல்நிலை சம்பந்தப்பட்ட இன்னல்களை, கடவுள் தண்டனையாக முன்செய்த

வினை, பாபம் எல்லாம் சூழ்ந்துக்கொண்டு வாட்டு கிறது என்று நம்பப்படுகிறது.

பாபகர்மங்களைச் செய்தவர்களுக்குத்தான், பஞ்சத்தையும், காலராவையும் போர்களையும் பூகம் பங்களையும் உண்டாக்கி தண்டனை அளிக்கின்றார் கடவுள் என்றும், இக்கொடுந் துன்பங்களுக்கெல்லாம் கருணைக்கடலான கடவுள்தான் காரணம் என்றும் கூறப்படுகிறது.

கடவுளின் மனதைத் திருப்திப்படுத்த, வேதபா ராயணம் ஓதுதல், திரிகால அபிஷேகாதி அலங்கா ரங்கள் செய்து, பூஜாநைவேத்தியங்களைப் படைத்தல் வேண்டுமென நாட்டிலே உலவும் நயவஞ்சக மதப் புரட்டர்கள் மக்களிடையே நம்ப வைக்கின்றனர். ஆனல்! அந்தக் கருணாநிதியால், பாபஜென்மங்களை தண்டிப்பதற்கு ஏவிய பஞ்சமும், நோயும், பட்டினி யும் நல்லவர்களையும், பக்தர்களையும், அபராதிகளையும் நிரபராதிகளையும் சமநோக்கோடுதான் தாக்க முற் படுகிறது. இப்படிக் கண்மூடித்தனமாக, இரக்க மில்லாக் கொடிய அரக்க நெஞ்சமுடன் தண்டிக்கும் அக்கடவுளை எப்படி கருணாமூர்த்தி, ஏழைபங்காளன் என்று ஒப்புக்கொள்ள முடியும்?

துன்பங்கள் நேரும்போது ஆண்டவனை வழி பட்டால், ஆலகாலமுண்டவன் அகற்றுவான் அல்லல் களை என்று நாட்டிலே உலவும் மதவாதிகள் கூறு கின்றனர்.

பஞ்சமும், பிணியும் உண்டாவதற்கு ஆண்டவனே காரணமாக இருக்கையில் அவனைப் பூசித்தால் எப்படி அத்துன்பங்கள் நம்மைவிட்டு விலகும்?

தம்பி! நீ கூறுகின்றாயே, தேசியம், சுதந்திரம் என்பதைப்பற்றி, அதையும் கேள். ஒற்றுமை, தியாகம், கட்டுப்பாடு முதலிய நன்னெறிகளைக் கொண்டு, காந்தியாரால் மேலும் செழித்து வளர்ந்த காங்கிரஸ் ஸ்தாபனத்திடமும், தேசியத் தோழர்களிடமும் பொது மக்கள் வைத்திருந்த நல்ல மதிப்பை இழந்து, பொது மக்கள்முன் தலைகாட்ட வெட்கப் படவேண்டிய நிலையை அடைந்துவிட்டதைப் பார். இவைகளை யோசித்துப் பார்த்தால், காங்கிரஸ் நிலைத்திருக்குமா? என்று. அதோ! பொது மக்களிடமிருந்து வரும் குரலைக் கேட்டாயா?

தம்பி! உன் தேசியத்தால் தென்னாடு வடநாட்டிற்கு அடிமைப்பட வேண்டுமா? திராவிடத்தை, வடநாட்டு முதலாளித்துவம் சுரண்டிக்கொண்டே தீய்த்துவிடப் பல சட்டதிட்டங்களை வகுத்துக்கொண்டும் வருகிறது, வடநாட்டுத் தலைவர்களைக்கொண்ட காங்கிரஸ்.

எனவே, திராவிடம் பண்டைய எழிலுடன் விளங்கவேண்டும்; அதற்கானச் சூழ்நிலையை மக்களிடம் உண்டாக்கும் அண்ணா செல்லும் வெற்றிப் பாதையை எட்டிப்பிடி, போ! போ!! பிடி அண்ணாவை! தம்பி! உனக்கு உரிமை வேண்டும்; ஆனால்,

உன் கடமையை மறவாதே! திராவிடத்தின் மக்களை, மதச்சேற்றிலிருந்து, பழமைப் படுகுழியில் தள்ளிடும் வெறியர்களின் கொட்டமும் அழிக்கப்பட வேண்டும். ஆனல்! நீ சுதந்திரம் வந்துவிட்டதாக, தம்பட்ட மடித்து சுயமரியாதையற்று, சுயநலக்காரர்களாகத் திரியும் சோம்பேறிகளின் சூழ்ச்சியிலே சிக்கிச் சீரழியும் நிலையை நம் திராவிடத்திற்கு இருக்க வைக்காதே!

காயமே இது பொய்யடா காற்றடைந்த பையடா! மாயாவுலகை நீ மதியாதே! என்று இகத்தைவிட்டுப் பரத்திற்குச் சென்று பரமனடியாராக விளங்க வேண்டிய பண்டாரக் கூட்டம், நாட்டிலே வஞ்சக மாகச் செல்வத்தைத் திரட்டி, சிங்கார மாளிகையிலே கொலுவிருந்து நிலைதவறி நெஞ்சம்வாடும் இளம் வஞ்சியர்களின் நெஞ்சமதை, பண்பாடி வஞ்சித்துப் பஞ்சணையிலே கவிபாடி, கலவியாடி, களித்திடும் கயவர்களின் பொய் வேதாந்த மொழிகளில், மயங்கி வாடும், பாமரமக்களை முன்னேற்றத்திற்குக் கொண்டு வர, அதோ! முன்னணி வீரராகச் செல்லும் அண்ணவைப் பிடி! போ! பிடி அண்ணவை!

தம்பி! திராவிடத்தின் வளமையை, வரண்ட பாலைவனமாக்கும் பன்னடைகளின் வரட்டுவாதங் களினல், வடநாட்டிற்கு அடிமைப்பட்ட நிலையிலிருக் கும் நம் நாடு, வடநாட்டுப் பிடியிலிருந்து விலகவேண் டாமா? அந்த அடிமைத் தளையிலிருந்து விடுதலைப் பெற உன் சுகம் உடல், பொருள், ஆவியை நம்

விடுதலைப் போராட்டத்திற்குத் தத்தம் செய்யடா என் அருமைத் தம்பி!

அப்போதுதான் உன் இன்பநாடு, திராவிடத்தின் சீர்கெட்ட கேட்டை புதுப்பிக்க முடியும். அதோ பாரடா தம்பி, புலவர்களின் எதிர்ப்பைத் துச்சமெனக்கருதி, தூயஉள்ளமுடன் செல்லும் அண்ணாவை! பிடியடா! போ! விரைவில்போய், பிடி அண்ணாவை! அதோ! ஓர் குரல்! "தோழர்களே! வாருங்கள், நான் செல்லும் வளமார் நமது திராவிடத்தின் அடிமைத்தளையை நீக்க வாருங்கள்! ஆனால்! நம்மை எப்போதும் நசுக்கிவிட, ஓர் கூட்டம், சதி செய்கிறது. அதனால், நாம் நாடுகடத்தப் படுவோம் நம் நல்லாட்சியாளரால். ஆனால், நம்பிக்கையிழக்க மாட்டோம்; நாயினும் கேடாய், நம் நாட்டு மக்கள் நலிவதைக் கண்டும், எப்படி மக்களை மறக்க முடியும்; நாம் திராவிடப் பெருங்குடி மக்கள். நாம் எங்கிருந்தாகிலும் நம் இன உணர்ச்சியை வெளிப்படுத்த வேண்டும், திராவிட மக்கள் எழுச்சி பெறவேண்டும், அறிவுப் புரட்சி பெருகவேண்டும், அதற்காக உழைப்போம், வாருங்கள்! உங்கள் ஒற்றுமை நிறைந்த உள்ளத்தை ஒப்படைப்பீர்களா?"

கேட்டாயா? தம்பி! கோடையிடியென, கொட்டு முழக்கெனக் கூவிக் கூவி அழைக்கின்றான், நாட்டு விடுதலைக்கு உங்கள் உழைப்பைத் தாருங்கள் என்று.

ஏன்? விழிக்கின்றாய்? நீ என்ன உலுத்தனா? ஊதாரியா? உன்மத்தம் பிடித்தவனா? உடன்பிறந்த

சோதரனையே காட்டிக்கொடுத்து உலகழியாப் புகழ் பெற்ற விபீடணன்வழி வந்தவனா? உன் உடலிலே ஓடுவது உண்மைத் தமிழன் இரத்தமாகும். நீ பிறந்த பொன்னாடு திராவிடம். நீ புறப்படுவது போர் அரங்கத்திற்கு. நீ உண்டாக்கப்போவது திராவிட நாட்டின் விடுதலை.

என்னைக் கேள் வீரனே! வீணுக்கு வார்த்தைகளைக் கொட்ட வேண்டாம். வீணர்களின் வெறியாட்டங்களை வெட்டி வீழ்த்துவேன்; கொந்தளிக்கும் கடலில்குதி என்றால், குதிப்பேன்; எரிகின்ற நெருப்பில் இரங்கென்றால் எதிர்த்துப் பேசேன்; வாளெடுத்து வயிற்றைப்பிள என்றாலும், வம்பாடமாட்டேன்; கட்டளை எதுவானாலும் சரி, திராவிடத்தின் விடுதலைக்கு எதைச் சொன்னாலும் தயங்கேன். சந்தேகம் வேண்டாம். சதிகாரர்களின் கொட்டத்தை மட்டம் தட்டுவேன் என்று சூளுரைத்து, அதோ செல்லும் அண்ணாவைப்பிடி! சீக்கிரம் சென்று பிடி அண்ணாவை!

தம்பி! உன்னைப் பாலூட்டி சீராட்டி வளர்த்தாள் திராவிடத்தாய்; அன்புத் தமிழமுதம் தந்து உன்னை ஒரு தமிழனாக, வாழும்படி செய்தாள். உடன் பிறந்த—எண்ணிக்கையிலடங்கா மக்கள், மானிலம் சிரிக்கும் வகையில் இன்று வாழ்கிறார்கள்.

வேதனைக்குரல் எழுப்புகிறார்கள். பட்டினி, பசி சாவு என்ற பாழ்பட்ட நிலையில்.

பண்டைய நாட்களில், நம் வீடு, வேங்கடமும், குமரியும், அரபிக்கடலும், வங்காளவிரிகுடாவும் எல்லையாக அமைத்து தனிச்சிறப்புடன் விளங்கியதே! இதை எண்ணிப்பார் தம்பி!

கல் தோன்றி மண் தோன்றாமுன் தோன்றி, மூத்தக்குடியில் பிறந்தவர்கள் நாம். அன்று நாம் அன்னையின் மொழியை—செந்தமிழ், பைந்தமிழ், ஒண்டமிழ், வண்டமிழ், மென்றமிழ் என்றெல்லாம் அடைமொழி தந்து, அகில மொழியான ஆங்கிலத்திலோ, தெய்வமொழியென எத்தர்களால் கூறப்படும் தேவமொழியாம் ஆரியத்திலோ இல்லாத, உயர்திணை அஃறிணையெனும் திணைப்பாகுபாடுகளைப் பெற்றதினால், என் தாயே நீ தண்மையுடையவள் என்றெல்லாம் புகழ்ந்தோமே, இன்று நம் மொழியை நீ சிந்தியாது,

ஆங்கில அணங்கின் ஒய்யார நடையிலே சிறிதுகாலம் நீ மயங்கினாய், உன் தாயைக் கவனிக்கவில்லை! அவளைப்பற்றிப் பேசுவதே தவறு என்று எண்ணினாய்—நாட்டின் நற்காலம் அவள் சென்றுவிட்டாள். அவளுக்கு முன்பே, இறந்துவிட்ட இந்திப் பிணத்தை, கலையின் கற்பகமே! அழகின் அற்புதமே என்று வாய்சலியாமல் கூறி உன் பேதமை நிறைந்த கண்களால் பார்த்துப் பார்த்து ரசித்துக்கொண்டு பிணத்தைப்பெற விரும்புகின்றாய்!

தம்பி! வேண்டாம் இந்த வேதனைக் கலந்த விபரீத புத்தி, பிறகு நீ நம் தாயையே காணமுடியாது!

ஏதோ! நமது தாய்தந்த வீரப்பாலின், தாய்மை அன்பையும், நன்றியையும் மறவாது, உன் சோதரன் செல்லும் பாதையை உற்றுப்பார். நமது அண்ணா, தாய் நாடாம் திராவிடத்திற்காக பாடுபடுவதைப்பார். அவர் கூறும் பகுத்தறிவுப் பாதையிலே சென்று, படமெடுத்தாடும் வடநாட்டு ஏகாதிபத்திய நச்சர வினிடமிருந்து நாட்டைக்காக்க அண்ணாவின் சொல் படி, பொழுது சென்று இருள் சூழ்வதற்குள் போ! பிடி அண்ணாவை!

தம்பி! வீட்டை நெருப்பு எரித்து விட்டாலும், வீட்டில் நெருப்பு இருக்கக்கூடாது என்று எவரும் விலக்கிவிடுவதில்லை; அதைப்போல, நீ என்னதான், மாற்றானின் மாய மொழிகளைக் கேட்டுக்கொண்டு என்னைத்தாக்கினாலும், கூடப்பிறந்தபாசம், உன்னைத்தாக்க என்மனம் ஒப்பவில்லையே.

தம்பி! நமக்கு முக்கியமான கேடயம், கட்டுப் பாடு என்பதை மறந்துவிட்டாயா!

தம்பி! நீயே, சிந்தித்துக்கூறு. நம் நாட்டிற்கு, வடநாட்டில் மந்திரிகள்—இருப்பதேன்! அவர்கள் நம் நாட்டை ஆள்வானேன்! கீர்த்தியும், புகழும் பெற்ற சமுதாயம் பன்னாடைகளிடம் தொடை நடுங்கி சாமரம் வீசுவதேன்? அரசாண்ட பரம்பரை, அடி வருடியாய்க் கிடப்பானேன்! அலெக்ஸாண்டரும், கஜி

ணியும், அவுரங்கசீப்பும் அடியெடுத்து வைக்கமுடி யாத நம் தென்னுடு இன்று சோற்றுக்குத் தெந்தான போடுவானேன்?

ஆனல், தம்பி! நீ ஆதரவுதரும் அஹிம்ஸா மூர்த்திகள், அலங்கரிக்கும் காங்கிரஸ் நண்பர்கள், ஏன் மக்களோடும், எங்களோடும் ஒற்றுப்போக மறுக்கிருர்கள்? இதை நீயே கேளேன்?

தனித்து வாழ நாம் வலிமையற்றவரா? நம்மிடம் ஆற்றல் இல்லையா? வாள் இல்லையா? போர் என்ற தும் பூரித்திடும் இரு திரண்டெழுந்த தோள் இல்லையா? யாக, யக்ஞங்களையும், அஸ்திர, சஸ் திரங்களையுமா நாம் நம்பிக்கிடந்தோம்? வஞ்சனையும், உதட்டிலே நஞ்சும் வைத்துக்கொண்டிருப்போரா நாம்?

நீ இப்போது ஏதோ சாதித்து விட்ட வீராதி வீரன் என்று எண்ணி எக்காளமிடும் கூட்டத்திலே இருந்துகொண்டு மாலையிட்டு மண்டியிடுகிருயே அவர்களால்தான் நம் நிலையை எடுத்துக்கூறத்தெரி யுமா? எந்தக்காலத்திலாவது, அவர்கள் நம் நாட்டின் மீது படையெடுத்து வெற்றி கண்டார்கள் என்று காட்டமுடியுமா?

விலாப்புடைக்க உண்டு கொழுத்து உன்னை ஏய்க்கின்றனர்—சுதந்திரம் என்றும், எல்லோரும் ஓர்குலம், நாம் இருக்கும் நாடு நமதென்பதறிந்தோம், என்று பல சிந்துபாடி உன் சிந்தனையைக் குழப்பி

விட்டனர். இதை யோசிக்கவேண்டாமா? கையிலே வாள் கீழேதலே, இதல்லவா நமது நாட்டினர் வீரம்? இதைமறுக்க முடியுமா? இந்த மரமண்டைகள்!

தம்பி! நீ மறந்து விட்டாய், உன் திராவிடத்தை! அதோ! புத்துலகச் சிற்பி பகுத்தறிவுப் பகலவன்! பண்டைய மரவர் வழிவந்த செம்மல்! நமது அண்ணு கவனப்படுத்துகின்ருர், நமது தாய்நாடு, சரித்திரகால முதல் தனிச்சிறப்புடன் விளங்க, அது இன்று வட நாட்டு பணுதிபத்யத்திற்கு அடிமைப்பட நீதான் உடந்தையாக இருக்கிருய் என்று. அதனல் இதையும் கேளாக்காதினனுயிருந்து நாட்டைக் காட்டிக் கொடுத்து துரோகி என்ற பட்டம் பெருதே! இன்னும் வேண்டிய விளக்கத்தைப்பெற அதோ! செல்லும் அறிஞரை அணைத்துக்கொள்ள சீக்கிரம்போ! பிடி, அண்ணுவை!

தம்பி! உன்னிடத்தில் கலே இருக்கிறது, கருத் திருக்கிறது. காவியங்கள் புனேயும் திறமிருக்கிறது. அலேகடலால் சூழப்பட்ட அவனி யெல்லாம் சென்று அரசாண்டார்கள் தமிழர்கள் என்ற நினேவிருக் கிறது. ஆனல், உன் மரமண்டையிலே படிந்துவிட்ட பழமைப்பாசியைமட்டும் விலக்குவதற்கு ஏற்ற விவே கந்தான் இல்லேயே!

தம்பி! உனக்குப் புகழ்பாடத்தெரியும், பொறுப் போடு தமிழில் பெரும் பற்றிருக்கிறது, வகையிருக் கிறது, வாய்மையோடு வீரமிருக்கிறது, பகையைச் சாய்த்திட பண்பிருக்கிறது. ஆனல்! பகுத்றிவின்

வழி நின்று, பேதத்தை ஒட்டிப் பாதை செப்ப னிடும் அண்ணாவின் முரசொலியால் இந்நாட்டைக் கட்டியாள உனக்கு ஏனோ? சுய உணர்ச்சி பிறக்க வில்லை?

தம்பி! கொல்லன் உலையிலிருக்கும் எஃகு மெழு காவதைப்போல, ஏழைமக்கள் அடையும் துயரைக் கண்டு உருகும் நெஞ்சமிருக்கிறது உன்னிடம். நாற்றிசையும் வாழ்கவென வாழ்த்துக் கூறும் நா வன்மையிருக்கிறது, ஆனால்! காலம் அறிந்து—கயவர் களுண்டாக்கிய உன்கருத்தை திருத்தியமைக்கின்ற திறம் பெற்றக் கலையை நீ பெறவில்லையே, அதனால்!

தம்பி! நீ வெற்றிபெற, வீணரின் வீம்புமொழி களைச் சாய்த்து நாட்டிலே ஒரு முன்னணி வீரனாக தன்மானமொடு உலவடா! அதற்கு அதோபார்! கோணல் புத்திக்காரர்களின் நாணல் அம்புகளை துச்சமெனக்கருதி, இடர்ப்பட்டாலும், திடநம்பிக் கையை ஆயுதமாகக்கொண்டு, திராவிடருக்கோர் தனிப்பெரும் தளபதியாகச் செல்லும் அண்ணாவின் அடிச்சுவட்டை விரைந்துசென்று பிடி! போ! மறு படி உன்னை மாயாவாதங்களும் மடமையும் சூழ்வதற் குள் அண்ணாவின் இலட்சியக்கோட்டையை எட்டிப் பிடி. போ! பிடி, அண்ணாவை!

தம்பி! பகுத்தறிவு என்பது மக்களின் மனத் திலே குடியேறிவிட்டால், வாழ்விலே ஓர் புது மணம் வீசும் மக்கள்—"வாழ்க்கை வாழ்வதற்கே" என்று

கூறுகிறார்கள்; மதவாதியோ மாயா உலகவாழ்க்கை வெறும் ஜாலம் என்று கூறுகிறான். ஆனால், அப்படியே மக்கள் நல்வாழ்க்கை வாழுகிறார்களா அது தான் இல்லை. ஏன்? சுதந்திரம் நம் பிறப்புரிமை; அடைந்துவிட்டோம் சுதந்திரம் என்றெல்லாம் ஆனந்தக்கூத்தாடுகின்றாயே! நாட்டிலே வயிற்றிற்கில்லாமல் வதங்கி வாடுகிறார்களே மக்கள்! அவர்கள் வாழ்வில் சுதந்திரம் எவ்வளவு உண்மையை நிலை நாட்டிற்று? பட்டினியிடம் போராடி, பசியுடன் போராடிப் போராடியேதானே மாறுகிறார்கள். அவர்கள் வாழத்தானே பிறந்தார்கள்? பிறக்கின்றார்கள்! ஆனால், வாழவில்லையே! அரசியல் மதம், பொருளாதாரம், இவைகளிலும் அவர்கள் வாழமுடியவில்லை. அதனால்தான் தம்பி! அண்ணா செல்லும் உரிமைப்பாதையைப் பிடி, போ! பிடி அண்ணாவை! என்று கூறுகிறேன்.

தம்பி! எவ்வளவு கூறியும் உன் மூடநம்பிக்கைக்கு ஓர் முற்றுப்புள்ளியை வைக்கமாட்டேன் என்கிறாய். எவனோ கபடன், வருங்காலம் எப்படி இருக்கும் என்பதைச் சிந்திக்காமல், அவன் இருக்கும் வரையில், இளித்தவாயர்களை ஏய்த்துப் பிழைக்க எழுதினான் பல இன்னலூட்டும் இதிகாசங்களை. அதிலே, சொன்னதை அப்படியே கேள், பெரியோர் மொழியை மறுத்துப்பேசாதே என்று கட்டளையிடும் முறையில் அதற்கு "விதி" என்ற எழிலுருவை அமைத்து, நரக, மோட்சம் என்ற பயத்தையும் மக்கள் உள்ளத்திலே ஊட்டி, அதன் தற்காப்புக்காக

மதம் என்னும் போர்வையைத் தந்த காரணத்தால் இன்றும், பாமரர் முதல், படித்தப் பரட்டுத்தலை கள் வரை, விதியென்ற வேதனைக் குட்டையில் விழுந்து விழிக்கிறார்கள்.

தம்பி! இந்த மூடநம்பிக்கையிருக்கிறதே, அது ஒரு பெரிய நச்சு மரம் தெரிந்ததா? அதை வெட்டி வீழ்த்த, பகுத்தறிவென்னும் கோடரியைக்கொண்டு செல்லும் பெருந்துணைவராகிய அண்ணாவைச் சீக்கிரம் சென்று பிடி! போ, பிடி அண்ணாவை!

தம்பி! முக்திபெற மார்க்கம் பக்தி செய்து கிடப்பதே, என்று முனிவர்களும், ரிஷிகளும், மத போதகர்களுமாகிய மோசக்காரர்கள் கூறிய முட்டாள்தனமான கட்டளைகளை நம்பி மக்கள் அவர்களை வணங்கினர், அக்காலத்தில். ஆனால், அதன் விளைவு! இக்காலத்திலும் அவர்கள் இட்டதே சட்டம், சொன்னதே வேதவாக்கியம் என்ற சொற்றணை கெட்டநிலை மக்களைச் சூழ்ந்துகொண்டது. அது வேதமார்க்கம், மதம் என்றால் மறுத்துப் பேசக் கூடாது. எதிர்த்துப் பேசினால், நாத்திகன், கடவுள் நம்பிக்கை அற்றவன் என்ற எதேச்சாதிகாரம் உருவாக்கப்பட்டது.

அரசியலில் உள்ள சிக்கல்களையும் ஊழல்களை யும், சர்வாதிகாரப்போக்கையும், சுரண்டல் கொடுமை யையும், வகுப்புரிமையையும் மக்களிடம் விளக்கினால், எப்படி நம்மீது, தேசத்துரோகி என்ற பட்டம் சூட்டப்

படுகிறதோ, அதுபோல, மதத்துறையிலே சனதன தர்மம் என்று கூறிக்கொள்பவர்களால் பகுத்தறிவுக் கண்களைப் பாழ்படுத்த மக்களிடையே நம்மைப்பற்றி நம்பிக்கையற்றவன், கடவுள் துவேஷி, மதத்துரோகி என்ற பட்டங்களை நம்மீது சுமத்தி நாட்டு மக்களின் அறிவொளிக்கு ஜாதிவெறியெனும் திரைபோடப் படுகிறது.

ஆனல், தம்பி! நாட்டிலே மக்களை நசிப்பதற்கு, ஒரு பக்கம் பணதிபத்யமும், மற்றோர் பக்கம் பழமையும், இருந்துவருகிறது. அதனல், பணத்திற்கும், பழமைக்கும் உள்ள காதல் இருக்கிறதே, அதை ஏன்? என்று கேட்கிருயா?

பழமை ஒழிக்கப்பட்டு, புதுமையை மலரவைத்தால், மக்களின் வாழ்க்கை, வரண்ட பாலைவனமாக இராமல், செழித்து விளங்கும் ஒரு மலர்த்தோட்டம் போலத்தானே மணம் வீசும். அதன்பின், ஏமாளியும் ஏய்ப்பவனும் இருக்கமாட்டான். மாளிகையினருகில் மண்குடிசை இராது. எங்கும் ஒரே சமதர்ம கீதமல்லவா எழும்பும். அதனலேதான் பணதிபத்யம் பழமையின் காதலனுக இருந்து, தன் சுக இன்ப வாழ்க்கையை எப்போதும், பாதுகாத்துக்கொள்ள, மதம்—வேதம், சாஸ்திரம், சம்பிரதாயம், சனதனம் ஆகிய பழமைப் பல்லக்கைச் சுமக்கும் எடுபிடிகளுக்கு ஆதரவு தந்து, அதற்குச் சிரத்தையும், சிந்தனையையும் செலவழித்து வருகிறது.

தம்பி! பக்தியெனும் பூஜாமனோபாவம் பகுத் தறிவைக் கொல்லும், மத நஞ்சுகலந்த மாதுளைப் பழம்.

பகுத்தறிவு வளராவிட்டால் மக்களை இன்னும் ஏதேச்சாதிகாரப் படுகுழியில் தள்ளும்.

பகுத்தறிவு வளரவேண்டும். மக்கள் வாழ்க் கையை மகிழ்ச்சியளிக்கும் முறையில் மக்களை அறி வுக்களஞ்சியங்களாக்க அவர்கள் மனதிலே நாட்டுப் பற்றையும் இனப்பற்றையும் குடியேற்றிவிட்டால் பழமை எனும் புற்றுகள் அகலும். மூடநம்பிக்கை இருள் விலகும். உண்மையில் அறிவியக்கப்பணி முரசு கொட்டி வெற்றிப்பெற்று வருகிறதென்று லும், இன்னும் அந்த இலட்சியக் கோட்டையை அடைய பல மேடுபள்ளங்களையும், ஆபத்துகளையும் தாண்டவேண்டி நிர்பந்தத்தை ஏற்றுக்கொண்டு, நாம் இனியாவது பழமைவெறியில் விழாமல் வெறுப்பு, விருப்பு அற்ற சமநிலையோடு நின்று, நம் சமுதாயத்தையும், நாட்டு நிலைமையையும் செழிப்புற அமைக்கப்பட வேண்டுமென்று அழைக்கும் நமது அண்ணா செல்லும் வெற்றிப் பாதையைப் பிடி! பிடி, அண்ணாவை!

தம்பி! தன்மானமுடன் திராவிடம் சிறப்புற்று திராவிடர்கள் செம்மையோடு வாழ்வதற்குப் பாடுபடு.

முன்னுக்குப் பின் முரணான கட்டுக்கதைகளை நம்பி, உன்னால் காட்டமுடியாத, சிந்திக்கமுடியாத

கடவுளைப்பற்றி எல்லாம் தெரிந்ததாகப் பிதற்றிக் கொண்டு அலைந்து திரியாதே.

நாட்டிலே, பல நயவஞ்சகர்கள் நடமாடுகிறார்கள். இது எந்தக்காலத்திலும் சாக்ரடிஸ், ஷெல்லி, கலிலியோ, ஆபிரகாம் லிங்கன், லெனின், காந்தியடிகள் போன்ற அறிஞர்களுக்கு எதிரிடையாகத் தோன்றும் சுரண்டல் சுயநலச் சர்வாதிகாரக் கரையான்கள். அதனால், ஆரியமாயையில் அறியாமை இருள் சூழ்ந்த உன் வாழ்வைப் பகுத்தறிவெனும் விளக்கைக்கொண்டு பார்! பண்டையத் தமிழர்களின் வரலாற்றுச் சுவடிகளை அரசியலிலே, ஆணவக் குரலோன் காட்டிய அதிகாரத்தின் வழி நடந்தோம். சமூகத்துறையிலே சதிகாரர்கள் பல சந்து பொந்து களிலே நம்மை அழைத்தேகினர். ஆண்டவன் அருள்பெற, ஆஸ்திகப்பூசுரர் காட்டிய வழியே அற நெறியென்றிருந்தோம்.

பொருளாதாரத்திலே, ஏய்த்துப் பிழைக்கும் எத்தர்கள் கூப்பிட்ட குறுகல்பாதையில் நடந்தோம். ஆனால், நாட்டிலே நாமும், மக்களும் கண்ட பலன் (?)

ஆகையினாலே அறிவுப்பாதையிலே நம்மை அழைக்கும், அண்ணாவைப் பார். அவைகளை ஏறிட்டுப்பாராமல், அதோ! இன்பபுரிக்குச் செல்லும் பாதையிலே முன்னேறிவிட்ட அண்ணாவைப் பிடி! போ! போ! போ! துரிதமாகச் சென்று பிடி அண்ணாவை!

———

தயாராகிறது! கற்பனை ஓவியம்!!

கற்றறியா கன்னிகை தன் இனிய குரலால்
இளைஞனை இன்பபுரிக்கு
அழைக்கிறாள்.
ஆனால்!
கடமைக்காக — காதலை கைவிடுகிறாள்
கருத்தில் அல்ல காரியத்தில்
காலச்சுழலில் பஞ்சை பட்டத்தரசியாகிறாள்
அதனால்!
பேதமிகும் முதலாளித்துவத்தை
முறியடித்து சமதர்ம சோலையிலே
பகுத்தறிவு மாடி எழுப்புகிறாள்.
மக்கள் புதுவாழ்வு பெற தன் வாழ்வையே
அர்ப்பணிக்கிறாள்

# தயிர்க்காரி

( அ. கோ. இ. வேலன் எழுதியது )

"புரட்சி" வெளியீடு.

ராப்பர் பிரிண்டிங் ஸ்ரீ வாசன் பிரஸ், காஞ்சிபுரம்.